

உ

# ஸ்ரீ ரமணதோத்திரம்.



அண்ணாமலைஸ்வாமியால்
இயற்றப்பட்டு



திருவண்ணாமலை, ஸ்ரீ ரமணாசிரமம் காரியதரிசி,
நிரஞ்சனாநந்தஸ்வாமிகளால்
பிரசுரிக்கப்பட்டது.

கும்பகோணம் ஸ்ரீ கலாநிதி பிரஸில்
பதிப்பிக்கப்பட்டது.

 1932 [விலை 0—0—6

ஓம்.

ஸ்ரீ ரமணசற்குருவே நம:



திருவண்ணாமலை

# ஸ்ரீ ரமண மஹர்ஷிகள்.

உ

# ஸ்ரீரமணதோத்திரம்



அண்ணாமலைஸ்வாமியால்
இயற்றப்பட்டு






திருவண்ணாமலை, ஸ்ரீ ரமணாசிரமம் காரியதரிசி,
நிரஞ்சனானந்தஸ்வாமிகளால்
பிரசுரிக்கப்பட்டது.
1932

விலை ரூ 0—0—6



ஓம்.

ஸ்ரீ ரமணசற்குருவே நம:

# ஸ்ரீரமணதோத்திரம்

## பாயிரம்

### நேரிசையாசிரியப்பா

தாரணி யருணா சலத்துத் தரத்தே
யாரணிக் கணித்தாஞ் சத்திய விஜய
நகரில் வெங்கு சிரேட்டி நற்றுணை
யகத்தி பச்சை யகட்டி லுதித்தோன்
கள்ளங் காணாக் கருத்தோன் பத்திமை
யுள்ளங் கொண்ட வுரவோ னுள்ளத்
துறவு பூண்ட தூயோன் சாந்தி
நறவம் பருகு நலத்தோன் மற்றை
யென்றநற் குணங்க ளியாவையுந் தக்க
சான்றோ ரினத்தாற் சமைந்தோன் சத்தி
நிபாத வுயிர்களை நேயமோ டாளத்
தபாத ரமணத் தடங்கண் ணாளனுக்
கென்புதோ றழலுக் கிழுதுபோ லுருகு
மன்புநா ராச்செஞ் சொல்லலர் தொடுத்துத்
தோத்திர வேரித் தொடையவ னருட்குப்
பாத்திர மாகிய பண்பால் வேய்ந்தான்
புன்மதி யகன்ற புலவோன் மிக்க
துன்மதி யாட்டைத் துய்ய தைம்மதி
யுத்தரட் டாதிநா ளும்பர்கள் போற்றப்
பத்தருட் பல்லோர் பதைபதைப் பெய்த
வீன்றா ளெவ்வத் திருங்கடன் மூழ்க
மூன்றா றுறழ்ந்தமும் மூன்றும் வயதிற்
பொன்னை யொத்த பொருப்புறு சோணையிற்
றன்னை யாண்டவத் தயாபர வேங்கடக்
கண்ணுதல் பதத்திற் கலந்த
வண்ணா மலைப்பே ரருந்தவத் தோனே.

மு. க. முருகன்.

# ஸ்ரீரமணஸ்தோத்திரம்

## காப்பு

### விருத்தம்

சீர்தரு செல்வ விநாயகனைச் செவ்வேள் சேவடியை
தேர்தரு வள்ள லருணேசன் றேவி யுண்ணுமுலையை
யேர்தரு வேணு கோபால னெந்தை ரமணனையுங்
கார்தரு தூய கலாவலியைக் கருத்தி லிருத்திடுவாம்.

---

## நூல்

### வேறு

1. சீர்பெறு மருணை தன்னிற்
சிறந்துவாழ்ந் தாண்ட ருள்செய்
பேர்பெறு விராகஞ் சீவ
கருணையே பிரம ஞான
மேர்பெறு மீச பக்தி
யிவைதிரண் டுருவ மான
வோர்பெரும் போத மாகும்
ரமணனை யுள்ளில் வைப்பாம்.

### வேறு

2. செம்பொன்னின் வடிவிலங்கு மேனி கண்டேன்
சிறக்குமுடை கோவணமுந் திகழக் கண்டேன்
வெம்பவத்தை நீறுசெய்யும் விழியுங் கண்டேன்
வெண்ணீறு பூத்திலங்கு நுதலுங் கண்டேன்
செம்பதுமத் திருப்பாத மிரண்டுங் கண்டேன்
செழியபுலி யாசனமுஞ் செறியக் கண்டே
னன்புள்ளா ரகமொழிக்கு மருளுங் கண்டே
னருள்ரமணன் சந்நிதியைக் கண்ட வாறே.

வேறு

3. செம்பொன்னின் வடிவி லங்கச் செழிக்கவே
[சோண சைலந்
துங்கநல் ஞான நாட்டந் துலங்கிட வன்பர் கூட்டந்
தம்முளந் தனக்குத் தானே தன்மய வின்பஞ் சார
வம்புவி யருளைக் கூட்டு மண்ணலாம் ரமண வாசான்.

வேறு

4. எண்டிசையும் வியாபித்தே யேகமதாய் நின்று
மெழுகடலு மேழுலகு மெய்ப்பொருளு மாகிக்
கண்டவைகள் முற்றுங்காண் கரியாகிக் கஞ்சன்
கண்டிடவு மிகவரிதாய்க் கதித்தோங்கிக் காட்டு
மண்ணலரு ணாசலனை நதொழில்விரிக்கு மதனு
ளன்பரக மடக்குமருட் டொழிற்றிறமே யின்று
கண்டிடுவோர் வியப்புறவே கருணைவிழி யாலே
காட்டுமிகக் களிவதன னருள்ரமண வாசான்.

வேறு

5. எங்கு நிறைந்தே யேழைக் கருளதனைப்
பொங்கத் தரவே பொருந்தி யொருவடிவு
சங்கை யிலாது சார்ந்தான் மோனநிலை
யெங்க ளையன் ரமண னெழில்வேதன்.

வேறு

6. அம்மை யாகியு மப்ப னாகியு
மைய னாகியுங் குரவனு
யிம்மை யாகியு மறுமை யாகியு
மின்ப மாகியுந் துன்பமாய்ச்
செம்மை யாகியு மெய்ம்மை யாகியுஞ்
சீவ னாகியும் யாவுமாந்
தன்மை யாகியும் யாவு மின்றியே
தனிமை யானதம் ரமணனே.

வேறு

7. அடிமுடி யறியொணு தமர்ந்த
வருணமா கிரிதனிற் சிறப்பாங்
கடிமலர்க் கந்தவாச் சிரமங்
களிப்புட னமர்ந்தருள் ரமணு
படியுளா ரிகழ்ச்சியும் புகழும்
பரமென வுணர்ந்திடும் பரனே
யடியரின் வாழ்வினுக் கணியே
யருட்பர சிவமதாங் குருவே.

வேறு

8. அன்றயன் மாலு மறிந்திட வரிதா
மரும்பயந் தீர்ந்திட வின்று
தன்னுநல் லன்பர் துகளெலாந் தீரத்
துணைமலர்ப் பதமதைச் சூட்டிக்
கொன்றக மதனைக் கோதிலாப் பரத்திற்
குடியுறச் செய்தருள் கூட்டத்
தண்ணருள் மேனி தாங்கியே வந்த
தயாபர ரமணவித் தகனே.

வேறு

9. அருட்பெருங் கடலே யருணை ரமணு
விருட்படா மகற்றி யென்று மடியேன்
கருப்படா திருக்கக் கருணை யருள்வா
யுருப்படா தொளிரு முயர்தே சிகனே.

வேறு

10. கடையனேன் றனைநின் கருணையா லாண்டிட
வுடையனே யுண்மை யுணர்வதாந் தெள்ளமு
தடையநான் றிரமா யருளிடா யருளினுக்
குடையனே ரமணு வுரையிலா மோனனே.

வேறு

11. ஆக்கையெனும் வாவிதனு ளன்பரக மலர்ந்திடவே
தாக்கருண னேர்வந்து தனியருணே தனிலமர்ந்து
காக்குமொரு ரமணமுனி கரவுடையேன் [றணைக்காப்பாய்
தேக்குசிதா னந்தவெளந் தெளிந்ததனிப் பெருமு [தலே.

12. சந்ததமு முலைமனது சன்மயமா நின்னிடையே
சந்ததமும் பொருந்திடவே சத்தியமா யருள்செய் [வாய்
சந்ததமுஞ் சுகமயமே சார்ந்திடுமென் ரமணமணி
சந்ததமு மருணைதனிற் சற்குருவாய் வருசிவமே.

13. புன்மயமா மனப்பகையைப் போக்கிமிகப் புனிதம [தாய்ச்
சின்மயமா நாடதனைச் சிறப்புடனே யாளுள
சன்மயமாம் பாதமுடி சாத்தியருள் சிரந்தனிலே
பொன்மயமாம் ரமணமுனி புனிதமுறு மருணை [யனே.

14. எத்திறமு மமைந்தில்லா வேழைதனை யெவ்விதமு
மித்தியா ளாவிடினே வினியெப்பி றப்பென்றே
மெத்தவஞ்சு வல்யானு மேலோய்நீ யென்றனுக்கு
முத்தியளித் தால்ரமண முனிவாரா ரிலையாள்வாய்

வேறு

15. கலிசெயுங் கொடுமை தன்னுற் கலங்கிடா திருக்க [வன்பர்
கலைசெயும் பெருமை யோடு கவினுருக் கொண்டு [வந்து
வலைசெயும் பாசந் தன்னை வாட்டிடு வீர தீரா
வுலைசெயு முளத்த னென்னை யுய்த்தருள் ரமண நீயே

16. உயிர்கொளு மறலி வந்தே னுனுட லொழிக்குமுன் [னர்
பயிர்செயு மகமா மெய்யும் பாழ்பட வவித்தை [மாய்த்திங்
கயலிலா வறிவைத் தானே யகமென வறியு மாறு
னயர்விலா வருளே தாரா யந்தணு ரமண தேவா.

17 இனிப்பட முடியா தின்ன லின்றருள் விழியா [னேக்கித்
துனிபடு மனது மாயத் துன்னிடு மருடா தூயா
கனிபடு மடிய ரன்பிற் கலந்திடு ரமணு கண்ணே
யணிபடு மருணே சாரு மாதியே யமல வேந்தே.

18. சிறுமிய ராசை பற்றிச் சின்னமாய்க் கெடாத [வண்ணம்
பெருமையா முனது பாதப் பிரிவிலா மருந்து தந்தே
யிருமையாந் தேகந் தானே யானென வெண்ணு [கின்ற
வறுமையும் போகு மாறு வரமருள் ரமண வேளே.

19. போற்றினேன் ரமண போதா
பொன்னடி மலரே யானும்
வேற்றுமை யில்லா தான
விமலமாம் பொருளே மேவ
வாற்றலே யென்று முண்டா
படங்கிடவருள்செய் வாயே
சீற்றமே யில்லா சாந்த
சின்மய வெளியாய் நின்றோய்.

வேறு

20. உரங்கொள்கல் லாகிடினு முருகுமொரு காலந்தன் [னிற்
கறங்குநே ரென்மனமுங் கசிந்ததொரு கா லு மில்லை

தெரிந்தவன் பாழ்குழிவிற் சிறியனொரு மூட னுன்றன்
சிறந்தவரு ளாற்காத்தல் சிரமமில்லை ரமண காவாய்.

வேறு

21. நண்ணிட வரிதா மானிடப் பிறவி
நண்ணினே னுன்னரு ளதனாற்
றன்மய மாகுந் தவமது தழைத்த
தனிப்பெரு முதல்வனே தமியேன்
சின்மய வடிவே சேர்ந்திட வென்றுஞ்
சிந்தனை செய்யுமா றருளாய்
பொன்மய வருண நாகமே பொருந்தும்
புண்ணிய குருபர ரமணா.

22. சதுரம தாக விடயம தெல்லாஞ்
சாய்த்திலன் சமதம முதலா
மதுரம தான சாதன நான்கு
மடைந்திலன் மடமையே மல்கி
யிதுரம தான வாழ்வென வுவந்தே
யீங்கவங் கிடந்திடு மேழை
பதுமம தான பாதமே பற்றப்
பரிந்தருள் ரமணநா யகனே.

23. அவமிக வுடையே னன்பிலா னுன்னை
யருச்சனை புரிகிலே னேழை
நவமிகு முனது நலந்தரு நாம
நவின்றிலே னரிய ராசைப்
பவமிகு பரவை யழுந்தின னந்தோ
பரமனே ரமணநற் புணையே
தவமிகு முனது தண்ணளி தந்தே
தநியிதி லாண்டருள் செய்வாய்.

24. ஓடிடு மனதை யுண்முக மாக்கி
யொளிசெயுஞ் சின்மய மதனை
நாடிட வருளாய் நற்சிவ ரூப
நாதனே நானொரு பேதை
வாடிட நீயும் வழங்கிடா திருப்பின்
வையகத் தளிப்பதார் சொல்வாய்
தேடிடு மன்பர் தெளிவுற வருளுந்
தேவனே ரமணமா முனியே.

25. பண்டைய தான பவவினை போக்கிப்
பகிர்முக வாசனை முற்றுங்
கண்டனம் புரிந்து கருத்தகங் காணக்
கனிவுட னுண்முக மேவி
யெண்டிசை விபுவா யிலங்கிடு நின்னி
லேழையா னமர்ந்திட வருளாய்
மண்டலம் போற்று மாதவ ரமண
மதிக்குமோர் பொருளிலா வடிவே.

26. எண்ணிலா வடியர் குழுவினி லேழை
யேங்குவ தழகதோ வெளியேன்
பண்ணிடு குறையென் பகர்ந்தொழித் தருள்வாய்
பரசிவ மாகிய பரனே
தண்படு செழிப்பால் விண்பட வோங்குந்
தலவுரு மும் பொழிலுடை யருணை
வண்படு வெற்பில் வாழ்ந்திடு ரமண
வரையறு பூரணப் பொருளே.

27. இந்தியக் கரண முடலவ்வே றுக்கி
யிருளுரு வவித்தையும் போக்கிச்

சந்தத மன்பா னின்றனை யென்னிற்
சலிப்பறச் சாருமா றுளதோ
முந்திமு தறிஞ ரித்தகை யடைய
முத்தா லாமென மொழிந்தா
ரந்தவோர் மொழியும் வழுவிடா தருளா
யருணையின் ரமணவா ரியனே.

28. உடலவை மூன்று மொழித்துமே யவத்தை
யுறுமபி மானியு மழித்து
விடலறு மாயை மேவிய வீசன்
விரிந்துள சமட்டியும் விட்டுக்
கடலதா மிவற்றின் முடிவிலாக் காதற்
கருத்தினைக் கவர்ந்திடா தொடுக்கி
யுடலிலா வுபய லட்சியந் தானே
யுதவிடல் ரமணவுன் கடனே.

29. எண்ணிலாப் பிழைக ளியற்றினும் பிள்ளை
யீன்றவர் பொறுப்பது கடனே
புண்ணியா புல்லன் புரிந்திடு பிழையும்
பொறுத்துட னின்றருள் புரிவா
யெண்ணிலா நாம ரூபமும் விடுத்தவ்
வேகமாம் வத்துவி லபேதம்
பண்ணியே சுத்தப் பாசுகப் பரவை
படிந்திடு ரமணவா ரிதியே.

30. அன்புட னன்ன மளிப்பவர் தமக்கு
மருச்சனை யாற்றுவர் தமக்கு
மின்புட னிதய மலர்மிசைப் பாத
மிருத்தியே பணிந்திடு பவர்க்கும்
பண்புடன் றனையே பகர்ந்தளித் தவரைப்
பாழ்படச் செய்துமே பரிவாற்

றன்மய மருளுந் தற்பர ரமண
தமியனை யாண்டிட லரிதோ.

வேறு

31. பொருந்தின னனென் புன்மை யகந்தையே
வருந்தினன் காம வன்னி யான்மிகக்
கரிந்தனன் கோபக் கடுவின் கொடுமையாற்
புரந்தனன் ரமண போத னெந்தையே.

வேறு

32. பழவினை யதனல் யானும் பார்மயல் பற்றி னேனுய்க்
கழைமொழிக் கொடியர்க் கேவற் கன்மமே
[புரிவோன் றன்னை
விழைவுட னுன்ற னேவல் விரவிட வருளே தந்து
பிழையெலாம்போக்கியாண்டபிரிவிலா ரமணதேவே

33. சிந்தையிலென்று முன்னி சிவகண பதியென் றேதி
வந்துயான் வினவுங்காலை வகுத்தகம் பிரம்ம மென்ற
சுந்தர குருவே செய்ம்மா றென்றுமே காணேன்
[ஐய்ய
வந்தண ரமண மூர்த்தி யடிமலர் போற்றி போற்றி.

வேறு

34. மும்மலமும் போக்கு மூர்த்தியே போற்றி
கமலநேர் பாத ரமணனே போற்றி
நிமலனே நித்த முத்தனே போற்றி
அமுதனே யாதி யத்தனே போற்றி

வேறு

35. பத்தியாற் பாடாப் பிழையும்
பரிவினற் பணியாப் பிழையுஞ்

சுத்தியாத் துதியாப் பிழையுஞ்
சுழல்மன திருகாப் பிழையு
நித்தமு நினையாப் பிழையு
நிமலநூல் பயிலாப் பிழையு
மித்துடன் ரமண வெல்லா
விழிபிழை பொறுத்தா ளின்றே.

36. சின்மய ரமணன் பாதம் சிறப்புட னென்றும் வாழி
மன்னிய கந்தாச் சிரம மழைபொழிற் றலமும் வாழி
துன்னிய வடியர் வாழி தூயஞா னங்கம் வாழி
யுன்னத வருணை வாழி யுயிரெலாம் வாழி வாழி.

வெண்பா

சித்தமலந் தீருஞ் சிறப்பாம் விவேகமுறும்
பத்திதரு ஞானம் பரிந்துவரும்—சுத்த
திருச்சுழியற் றோன்றகுரு தினரையாள் வானைக்
கருத்திலுன்னிக் கைதொழுதக் கால்,

ஸ்ரீரமணதோத்திரம்

முற்றிற்று.

